[12th February 1959

*Salaries of Tutors and Professors of Government Colleges*

* 247 *Q.*—SRI M. KALYANASUNDARM (on behalf of Sri N. K. Palanisami) : Will the Hon. the Minister for Finance be pleased to state the present stage of the proposal to raise the salaries of Tutors and Professors in the Government Colleges in the State?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no proposal before Government now to raise the salaries of Tutors and Professors in the Government Colleges in the State.

SRI M. KALYANASUNDARAM : ஸர், யூனிவர்ஸிட்டி கிராண்ட் கமிஷன் சிபாரிசு செய்த விகிதத்தில் சம்பளங்கள் கொடுக்கப்பட்டு விட்டனவா என்பதை அறிய விரும்புகிறேன் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : யூனிவர்ஸிட்டி கிராண்ட் கமிஷன் சிபாரிசு செய்ய முன்வந்திருப்பது கவர்ன்மெண்ட் காலேஜ் களுக்கு அல்ல, தனிப்பட்டவர்கள் நடத்தும் காலேஜ்களுக்குத்தான், அது பற்றி இன்னும் முடிவு செய்யப்படவில்லை.

*Assignment of darkhast lands to the landless poor and the Harijans*

* 248 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சென்னை இராஜ்யத்திலிருக்கும் நிலமில்லாத ஏழைகளுக்கும், ஹரிஜனங்களுக்கும், தற்காஸ்து நிலங்களை வழங்குவதற்கான நடவடிக்கைகளைத் துரிதப்படுத்துவதற்காக எந்தெந்த ஜில்லாக்களிலே ஸ்பெஷல் தாசில்தார்களும், சம்பந்தப்பட்ட இதர கிளார்க்குகளும், சிப்பந்திகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Special staff for the purpose of speeding up assignment of waste lands at the disposal of Government has been sanctioned in all the districts except Chingleput, Tirunelveli, Ramanathapuram and Kanyakumari.

SRI P. G. MANICKAM : ஸர், கோயம்புத்தூர் ஜில்லாவுக்கு ஸ்பெஷல் தாசில்தார்களும், மற்ற சிப்பந்திகளும், இதரர்களும் நியமிக்கப்பட்டுவிட்டார்களா ?

THE HON. SRI M. A: MANICKAVELU : ஆமாம், கோயம்புத்தூர் ஜில்லாவுக்கு ஒரு டெப்டி தாசில்தார், மூன்று ரெவின்யூ இன்ஸ்பெக்டர்கள், மற்றும் இதரர்களும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

SRI G. G. GURUMURTHI : ஸர், இப்போது நியமிக்கப்பட்டிருக்கும் டெப்டி தாசீல்தார் அவர்களினாலும், ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களினாலும் இதுவரை எல்லா நிலங்களையும் பட்டா செய்து கொடுக்க முடியவில்லை. இன்னும் கொஞ்ச நாட்களுக்கு அவர்கள் அங்கேயே இருக்க வேண்டும் என்று ஏதாவது மனுக்கள் அரசாங்கத்திற்கு வந்திருக்கின்றனவா ? அப்படியென்றால் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்களின் சிபாரிசு இல்லாமலேயே, அவர்களுக்கு அங்கு இன்னும் வேலை இருக்கும் என்று கருதினால் அவர்கள் தொடர்ந்து அங்கு இருந்து வேலை செய்து வருவார்கள்.

12th February 1959]

SRI T. S. RAMASWAMY PILLAI : ஸார், இதுமாதிரி வேறு எந்த ஜில்லாக்களில் எல்லாம் அதிகாரிகளை நியமிக்க அரசாங்கத்திற்கு உத்தேசமிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எங்கேயெல்லாம் பெரிய அளவில் இம்மாதிரி நிலங்களை பட்டா செய்து கொடுக்க வேண்டும் என்று இருக்கிறதோ அந்த இடங்களுக்கு எல்லாம் நியமிக்கப் படுவார்கள்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ஸார், இப்போது புறம்போக்கு நிலங்களை நிலமற்ற விவசாயிகள், அரிஜனங்கள் இவர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களை அடிக்கடி எவிக்‌ஷன் ஆக்ட் பிரகாரம் வெளியேற வேண்டும் என்று அடிக்கடி தொந்தரவு படுத்துவதாக தெரிகிறது. ஆகவே அவர்கள் இப்போது இருந்து வரக்கூடிய நிலத்தை அவர்களுக்கே அடமானம் செய்வதற்கு சர்க்கார் ஏதாவது உத்தரவு போடுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரி நிலங்களை வைத்துக் கொண்டிருப்பதில் சானல் புறம்போக்கு முதலிய நிலங்களை வைத்துக்கொண்டிருந்தால் அதற்காக சர்க்கார் அடமானம் செய்து கொள்வதற்கு உத்தரவு போட முடியாது.

SRI P. G. MANICKAM : ஸார், கோயம்புத்தூர் ஜில்லாவில் தாளவாடி என்ற இடத்தில் சிவோஜிநாமா இனத்தில் சேர்ந்த இடத்தை பலர் கைவசப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். அந்த நிலங்களை எடுத்து ஹரிஜனங்களுக்கு கொடுக்கவேண்டுமென்று சென்ற அசெம்பிளி கூட்டத்திலும் சொன்னேன். ஆகவே அந்த இடத்தை எடுத்து சர்வே நடத்துவதற்குள்ள நடவடிக்கையை சர்க்கார் துரிதப்படுத்துவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்காக நடவடிக்கை எடுக்கப்பட்டுத்தான் வருகிறது. இருந்தாலும் ஐந்தாறு வருஷங்களாக அங்கே இருப்பவர்களை நினைத்தவுடன் மாற்றிவிட்டு மற்றவர்களுக்கு எடுத்துக்கொடுப்பது அவ்வளவு நல்லதல்ல என்பதைத் தான் அரசாங்கம் கருதுகின்றது.

SRI N. MARUDACHALAM : ஸார், ஹரிஜனங்களுக்கு நிலம் கொடுக்கிற விஷயத்தில் அதில் வேலை செய்துவரும் ஹரிஜனங்களை திடீரென்று முன் எச்சரிக்கை இல்லாமல் வெளியேறச் சொல்கிறார்கள். பல இடங்களில், இதனால் ஹரிஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே வெளியேறச் சொல்லுவதற்கு முன்னால் தகுந்தபடி முன்னெச்சரிக்கை செய்யவேண்டுமென்று அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ? இல்லை, இவ்விதம் முன்னெச்சரிக்கை இல்லாமல் வெளியேற சொல்லி யிருக்கும் அதிகாரிகளின் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்படும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : முன்னெச்சரிக்கை இல்லாமல் காலி செய்வது என்பது சாத்தியமல்ல என்பது தான் என் அபிப்பிராயம்.

*Well Subsidy Scheme*

* 249 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government intend to revive the Well Subsidy Scheme; and

(*b*) if so, what the details are?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A statement [a] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on page 245 infra.